## IV.—GOVERNMENT MOTIONS.

### (1) ELECTION TO THE COMMITTEE ON PUBLIC ACCOUNTS FOR 1962–63.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That with reference to Rule 173 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. Speaker, to elect fourteen members to be members of the Committee on Public Accounts for the year 1962–63."

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தக் கமிட்டிகளுடைய எண்ணிக்கையையெல்லாம் நாம் நிர்ணயித்து ஐந்து வருஷங்களுக்கு மேலாகிறது. அனுபவத்தில் பார்க்கிறபோது இந்த எண்ணிக்கை போதாது. புதிதாக வந்திருக்கும் அங்கத்தினர்கள் அனுபவம் பெறுவதற்கு இன்னும் கொஞ்சம் அதிகமாக அங்கத்தினர்களைச் சேர்த்தால் சரியாக இருக்கும். இது சம்பந்தமாக விதிகள் மாற்றப்படவேண்டுமென்ற யோசனையைச் சபை முதல்வருக்கு நான் கூறிக்கொள்கின்றேன். இப்பொழுது தங்களால் நியமிக்கப்பட்டிருக்கக்கூடிய அந்தக் குழுவில் சீக்கிரம் இந்தப் பிரச்னையை வைத்து, முடிவு எடுக்கவேண்டுமென்ற யோசனையைத் தெரிவித்துக்கொள்கின்றேன். இப்பொழுது சபை முன் இருக்கும் பிரேரணையை நான் ஆட்சேபிக்கவில்லை. இந்தப் பிரேரணையை நான் ஆதரிக்கிறேன். என்றாலும், விரைவில் இந்தக் குழுக்களின் அங்கத்தினர்களுடைய எண்ணிக்கையை அதிகரிப்பதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டுமென்ற யோசனையைச் சமர்ப்பித்துக்கொள்கின்றேன்.

இத்துடன் இன்னொரு விவரமும் அறிய விரும்புகிறேன். சட்டசபை விதிகளின்படி கவுன்சில் அங்கத்தினர்களும் இக் குழுக்களில் சேர்க்கப்படவேண்டுமென்று இருக்கிறது. இந்தச் சபை அந்த எண்ணிக்கையையும் நிர்ணயித்தாகவேண்டும். அதற்குள்ள யோசனை எப்பொழுது வரும் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 'விதிகள் இயற்றும் குழுவை' இப்பொழுது அமைத்திருக்கிறீர்கள். விதிகள் இயற்றும் குழு, விதிகளில் ஏதாவது மாற்றம் செய்ய வேண்டுமா என்பதைப் பற்றி பின்னர் ஆலோசனை செய்துகொள்ளலாம். இப்பொழுது சபை முன் உள்ள பிரேரணை, "14 உறுப்பினர்களை பொதுக் கணக்குக் குழுவிற்குத் தேர்ந்தெடுப்பது" என்பதாகும். இந்தப் பிரேரணையை கனம் உறுப்பினர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : அதை ஆலோசனை செய்து முடிவு கட்டலாம்.

The question is—

"That with reference to Rule 173 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fourteen members to be members of the Committee on Public Accounts for the year 1962–63."

The motion was put and carried.

24th April 1962]

**MR. SPEAKER:** ஒற்றை மாற்று வோட் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி தேர்தல்களை நடத்துவதற்காக நான் வகுத்துள்ள விதிமுறைகளை அனுசரித்து, பொதுக் கணக்குக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக அபேட்சகர்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ம் தேதி, வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் தங்கள் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். செயலாளருக்கு மனுச் செய்துகொண்டால் நியமனப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

நியமனப் பத்திரங்கள் 1962-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26-ம் தேதி வியாழக்கிழமை பிற்பகல் 3 மணிக்குப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962 மே 4-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்குள் வாபஸ் பெறலாம்.

நியமிக்கப்பெற்றுள்ள அபேட்சகர்கள் எண்ணிக்கை தேர்ந்தெடுக்கவேண்டிய உறுப்பினர்கள் எண்ணிக்கையைவிட, அதாவது 14-ஐவிட அதிகமாக இருந்தால் 1962 மே 5-ந் தேதி சனிக்கிழமை காலை 9 மணி முதல் பிற்பகல் 1 மணி வரையில் வாக்கெடுப்பு நடைபெறும்.

(2) ELECTION TO THE COMMITTEE ON ESTIMATES FOR 1962–63.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** Sir, I move—

"That with reference to Rule 164 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fourteen members to be members of the Committee on Estimates for the year 1962-63."

**MR. SPEAKER:** The question is—

"That with reference to Rule 164 of the Madras Legislative Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fourteen members to be members of the Committee on Estimates for the year 1962–63."

The motion was put and carried.

**MR. SPEAKER:** ஒற்றை மாற்று வோட் மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி தேர்தல்களை நடத்துவதற்காக நான் வகுத்துள்ள விதிமுறைகளை அனுசரித்து, மதிப்பீட்டுக் குழுவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக அபேட்சகர்கள் 1962 ஏப்ரல் 26-ம் தேதி வியாழக்கிழமை காலை 11 மணிக்குள் தங்கள் நியமனப் பத்திரங்களைச் செயலாளரிடம் சேர்ப்பிக்க வேண்டும். செயலாளருக்கு மனுச் செய்துகொண்டால் நியமனப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

நியமனப் பத்திரங்கள் ஏப்ரல் 26-ந் தேதி வியாழக்கிழமை பிற்பகல் 3 மணிக்கு பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். வாபஸ் பெற விரும்பும் அபேட்சகர்கள் 1962 மே 4-ந் தேதி வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்குள் வாபஸ் பெறலாம்.